14th March 1959]

(ஆ) இவர்களுள், ஹரிஜனங்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The Production-*cum*-Service Centre for the manufacture of hurricane lanterns at Palni has not yet commenced production.

(*b*) The question does not arise.

MR. SPEAKER : Questions are over.

**[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—PRIVILEGE MOTION *RE* INCORRECT PUBLICATION OF PROCEEDINGS IN THE "DINAMANI".

MR. SPEAKER : Subsequent to Sri K. Anbazhagan raising the issue of privilege over the 'Dinamani' publishing an incorrect report of the proceedings of the House, the Paper has issued a correction in its issue, dated 13th March 1959. They have also published the news just after the Editorial thereby giving prominence to the correction. They have published a correct version of the proceedings that took place that day. Besides, they have also stated that the headline using the word " நயவஞ்சகம் " is wrong. They have expressed their regret for the same. Further, they have also expressed regret for the incorrect news. In my opinion this may be accepted as unconditional apology and the regret expressed by the Paper may be accepted. The matter may, therefore, be dropped.

## III.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1959-60—*cont.*

### DEMAND XXIV—LABOUR INCLUDING FACTORIES

MR. SPEAKER : We shall now take up Demand XXIV, Labour including Factories. The Hon. Minister may move the Demand.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 30,29,700 under Demand XXIV—Labour including Factories."

கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மான்யக் கோரிக்கையில், சென்ற ஆண்டு தொழிலாளர்கள் சம்பந்தமாக என்னென்ன காரியங்கள்செய்யப்பட்டிருக்கின்றன என்பதை ஒரு புத்தக ரூபமாக வெளியிட்டிருக்கிறேன். ஏனென்றால் இதைப் பற்றி ஆரம்பத்திலேயே விவரித்து சொல்லவேண்டுமென்று சொன்னால் அதற்கு குறைந்தது முக்கால் மணி நேரமாவது பிடிக்கும். அதற்குப் பிறகு கனம் அங்கத்தினர்கள் சொல்கிற வாதங்களுக்குப் பதில் சொல்லவேண்டுமென்று சொன்னால் அதற்கும் ஒரு முக்கால் மணி நேரமாவது பிடிக்கும். ஆகவே, இருக்கிற அவகாசத்தில் ஒன்றரை மணி நேரத்தை நானே எடுத்துக்கொள்ளக் கூடாதென்று இதையே எனது பேச்சாக அச்சடித்து கனம் அங்கத்தினர்களுக்கு வழங்கியிருக்கிறேன். இது சம்பந்தமாக கனம் அங்கத்தினர்கள் கூறுகிற யோசனைகள் எல்லாவற்றிற்கும் இறுதியில் பதில் சொல்கிறேன் என்று சொல்லிக்கொண்டு இந்த மான்யக் கோரிக்கையை பிரேரேபிக்கிறேன்.

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் பக்கிரிசாமி கொண்டு வந்திருக்கும் வெட்டுப்பிரேரணையை எதிர்க்கட்சியினர் எல்லோரும் ஆதரிக்கிறார்கள் என்று கேட்டேன். ஆகவே, பக்கிரிசுவாமி அவர்களை அதை பிரேரேபிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.